



# மதம் வேண்டுமா?

அணா-2.

"Men must be made to underst
that the important thing is
to develop which is within them
to purify themselves,
to better themselves,
to come closer to the perfect Ide
The rest is secondary."

- Dr. Lecomte du Noüy -
(Human Destiny-page : 128)

(இதன் மொழிபெயர்ப்பு பின் அட்டை உட்பு

# மதம் வேண்டுமா?

[ பேராசிரியர்: ஆ. முத்துசிவன் ]




அருள்நெறித் திருககூட்டம்
குன்றக்குடி

## முன்னுரை

“அங்கே ஒரு வீடு இருக்கிறது என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் அதற்கொரு வழி வேண்டும் என்பதைத்தான் மறுக்கிறேன்” என்று ஒருவர் சொன்னால் அது எவ்வளவு புத்திசாலித்தனமாக இருக்கும்?

‘அப்படிச் சொல்லுகிறவர்களும் இருக்கிறார்களா?’ என்றுதானே கேட்கத் தோன்றுகிறது உங்கட்கு? ஆம்; இருக்கத்தான் இருக்கிறார்கள்.

75-5

" கடவுளாவது, இருப்பதாவது ? . எல்லாம் குருட்டு நம்பிக்கை; பாமர மக்களை மயக்கிப் பணம் பறிக்கச் செய்யும் படுமோசடி " என்று சொல்லிவந்த கூட்டத்தாரில் சிலர் இப்பொழுது கடவுளுண்மையை மறுப்பதில்லை.

" கடவுளை நாங்கள் மறுக்கவில்லை. அதற்காக மதம் என்ற பித்தலாட்டமெல்லாம் ஏன் இருக்கவேண்டும் ? ஒரு சிலரின் வயிற்றுப் பிழைப்புக்காக ஏற்படுத்திக் கொண்ட ஆளை ஏய்க்கும் வித்தைதான் மதம் " என்று கூறி, கடவுளுண்மையை மறுக்காத அவர்கள் கடவுளை உணர்த்தும் நெறியாகிய மதத்தை மறுத்து வருகிறார்கள்.

அது சரியா ? அல்லது வெறும் ஆரவாரம் தானா ?

விஞ்ஞானிகளுடையவும், மெய்ஞ்ஞானிகளுடையவும் துணைகொண்டு மதம் இன்றியமையாத ஒன்றே என்பதை இச்சிறு நூலில் பேராசிரியர் **முத்துசிவன்** எடுத்துரைக்கிறார். அவருக்கு நமது நன்றி.

இங்ஙனம்,

**சா. கணேசன்**

**எஸ். மீனாட்சிசுந்தரம்**

செயலாளர்கள்.

# மதம் வேண்டுமா?

பொல்லாத கேள்வி. ஏனென்றால் மதம் நம்பிக்கையைப்பொறுத்த விஷயம். நாம் வாழுகின்ற காலமோ கொனஷ்டை நிறைந்த காலம். நம்பிக்கைக்கு வந்திருக்கிற ஆபத்து மிக மிகப் பெரிது.

"விண்ணிடை இரதம் ஊர்ந்து
மேதினி" கலக்குதலிலும்,

"மண்ணிடை வாளை ஏந்திப்
பகைப் புலம்" மாய்ப்பதிலும்

வெறிகொண்டு திரிகிற இந்தக்காலத்தில், காலத்தின் கோலத்தைக் கருத்தில்கொள்ளாது நம்பிக்கை - வேதாந்தத்தை உபதேசிக்க முற்பட்டால்,

அது வெறுங் கேலிக் கூத்தாகவே முடியும். ஏனென்றால், இது விஞ்ஞான காலம். நாம் சொல்லுகிற எதையும் விஞ்ஞானம் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆதரிப்புச் சின்னமாக முத்திரையிட்டுக் கொடுக்க வேண்டும். அல்லாதுபோனால் நாம் சொல்வதை உலகம் உதறித்தள்ளிவிடும். காலப் போக்கு அவ்வாறிருக்கிறது.

அப்படியானால், இனி நமக்குரிய கதி விஞ்ஞானந்தான், சமயம் இல்லை என்று முடிவுகட்டிவிடலாமா என்றால், அதற்கும் வழியில்லை. சிறந்த அறிஞர்களுக்குள் அறிஞராக விளங்கும் ஆங்கில அறிஞர் ஸ்ரீமான் ஒயிட் ஹெட் (White Head) என்பவர் இது சம்பந்தமாக யாது கூறுகிறார் என்பதைப் பார்ப்போம்.

*"The future Course of human Civilization rests upon our decision asto the relationship between science and religion"*

"மனித நாகரிகத்தின் எதிர்கால மானது விஞ்ஞானத்திற்கும் சமயத் திற்கும் உள்ள தொடர்பு குறித்து நாம் என்ன முடிவு செய்கிருேமோ அதைப்பொறுத்திருக்கிறது."

இதுவே ஸ்ரீமான் ஒயிட் ஹெட் என்பவரின் கருத்து; கருத்து என்று சொல்வதைவிட நம்பிக்கை என்று சொன்னுல் இன்னும் நன்ருக இருக் கும்.

விஞ்ஞான மோகமே சமயப் புறக் கணிப்பிற்குரிய காரணமாக விளங்கு

வதால், அதன் துணை கொண்டே சமயத்தின் மாண்பினை உணர முற்படுதல் மிகவும் பொருத்தமாக இருக்கும்.

## மதத்தின் பொருள் யாது?

"மதமாவது, இழவாவது. மதம் மதம் என்று சாகின்றீர்களே! எதற்கு மதம்? மதமா இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றிய உண்மையை விளக்கப் போகிறது? சற்று இந்தப் பிரபஞ்சத்தை உற்றுப் பாருங்கள். பதார்த்தத்தை (*Matter*) பார்க்கிறோம். சக்தி (*Energy*) யைப் பார்க்கிறோம். இன்னும் குருட்டாம்போக்கில் நிகழுகிற தற்செயல்களைப் (*accidents*) பார்க்கிறோம். இன்று நாம் காணும் பிண்ட உலகம் ஆதியில் ஆவி நிலையில் இருந்தது.

அந்த நிலையிலிருந்து இன்று அண்டமாகத் தோன்றும் காட்சி நிலை வரை படிப்படியாக வளர்ந்துகொண்டே வந்திருக்கிறது. அவ்வாறு படிவளர்ச்சி (*Evolution*) பெறுவதெல்லாம் ஏதேனும் குறிக்கோளை முன்னிட்டா என்றால், அது ஒன்றும் கிடையாது. வெறும் குருட்டாம் போக்கு! எத்தனை எத்தனையோ குருட்டாம் போக்கு-நிகழ்ச்சிகளின் (*accidents*) காரணமாக இன்று இந்த நிலையை அடைந்திருக்கிறது. குரங்கானது தன்னுடைய வாலை இழந்து மனித வடிவம் எய்தியதெல்லாம் ஒரு வகையான குருட்டாம் போக்கு-நிகழ்ச்சி. அதாவது தற்செயல். இந்தப் பிரபஞ்சத்தினிடையே எந்தவிதமான நோக்கமோ குறிக்கோளோ இருப்பதாகத் தெரியவில்லை. சும்மா, மதம், மதம் என்று

ஏன் பிதற்ற வேண்டும்'' என்று சில “அறிஞர்கள்'' கூக்குரலிடுகின்றனர் கள். இந்த இடத்தில் அறிஞர் பெர்னார்ட் ஷா (*Bernard Shaw*) சொல் லிச் சொல்லி தலையில் அடித்துக் கொண்டது ஞாபகத்திற்கு வரு கிறது.

“நம்பிக்கையினுடைய ஏழ்மைநிலை இரங்கத்தக்கதா அல்லது அவநம்பிக் கையின் அற்பநிலை இரங்கத்தக்கதா? என்பது எளிதாகப் புரியவில்லையே'' என்கிறார்.

*“One hardly Knows Which is the more appalling; the abjectness of credulity or the flippancy of Scepticism”*

அவர் கூறியது முற்றிலும் உண்மைதான். அழுதாலும் தீராது, சிரித்தாலும் தீராது.

பிரபஞ்ச உற்பத்தியானது வெறும் குருட்டாம்போக்கு நிகழ்ச்சியா அல்லது ஏதேனும் லக்ஷியத்தை அடிப்படையாகக் கொண்டதா என்பதைப் பார்ப்போம். குருட்டாம் போக்கு நிகழ்ச்சியில்லை. நம்மால் இன்னதென்று உணர்ந்துகொள்ள முடியாத லக்ஷியத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளதென்றே நவீன ஆராய்ச்சி உறுதிகூறுகிறது.

ஜீவராசிகளிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றன. அதற்கு விஞ்ஞானிகள் கூறும் சிறந்த காரணங்கள் இரண்டாகும். ஒன்று சந்

தர்ப்பம். மற்ருென்று சூழ்நிலைப் பாதிப்பு. சூழ்நிலைக்கேற்றபடி வாழத் தெரிந்து கொண்ட ஜந்து உருவான வுடன், படிவளர்ச்சி (*Evolution*) நின் றிருக்கலாமே. நமக்குத்தெரிந்த சிறிய ஜந்து ஒன்று சூழ்நிலைக்கேற்றபடி நன்ருக வாழ்ந்து வருவதை நாமே பார்க்கிருேம். படிவளர்ச்சியானது அத்துடன் நிற்காமல், மேலும் மேலும், நுட்பங்கள் அமைந்த ஜந்துக்களை ஏன் ஓயாமல் ஒழியாமல் தோற்றுவிக்க வேண்டும், அதுவும், எப்பொழுதும் ஏன் தோற்றுவித்துக் கொண்டே செல்லவேண்டும்? அப் படியானல் ஏதேனும் ஒரு நோக்கம் இருக்கத்தான் வேண்டும். சந்தர்ப்பம் சூழ்நிலைப்பாதிப்பு ஆகியவைகளைத் துணைகொண்டு படிவளர்ச்சி எந்தத் திக்கை நாடி இயங்குகிறது என்

பதைச் சொல்ல முடிகிறது. ஆனால் அவைகளால் படிவளர்ச்சி ஏன்தான் நிகழவேண்டும் என்பதைச் சொல்ல முடியவில்லை. இதுசம்பந்தமாக ஆசிரியர் பெர்க்ஸன் (**Bergson**) கூறுவதாவது:-

"சந்தர்ப்பமும் (**Chance**) சூழ்நிலைப்பாதிப்பும் (***adaptation***) படிவளர்ச்சியினுடைய அகச்சுழற்சிகளைத் தெளிவுபடுத்தும். ஆனால் படிவளர்ச்சியினுடைய கதியையோ, இன்னும் சொல்லப்போனால், அதனுடைய இயக்கத்தினையோ விளக்க இயலாது" என்கிறார்.

*" The truth is that adaptation explains the inner windings of Evolutionary progress, but not the*

*general direction of the movement, still less, the movement itself."*

ஆகவே ஏதோ ஒருவகையான லக்ஷியத்தைக் கொண்டே பிரபஞ்சம் இயங்குகிறது, படிவளர்ச்சி நடை பெறுகிறது என்பது மேதாவியாகிய பெர்க்ஸன் என்பவரின் கருத்து.

நாம் வாழுகின்ற பூமியானது வெறுமனே மொட்டை மொழுக்கான மண்குவியலாக இருந்திருக்கக் கூடாதோ! உயிர்வர்க்கங்கள் தோன்றுவ தற்குரிய இடமாக அல்லவா அமைந் திருக்கிறது. சூரிய ஒளியைப் பெற்று வளர்கின்ற தாவரங்கள் இல்லையென் றால் நிலப்பரப்பெல்லாம் வெறும் பாலைவனமாக அல்லவா மாறியிருக் கும்! பகல் இரவு என்றநியதி இல்லை

யென்ருல் உயிர்வாழ்க்கைக்குரிய கரியமில வாயுவின் கதி என்னவாக இருக்கும்! உயிர்வாழ்க்கைக்கே இன்றியமையாத தண்ணீர் தோன்றிற்றே! அதன் அருமையைத்தான் என்ன சொல்வது! ஆனதினுல் அல்லவா நம்மவர்கள் தண்ணீரை ஆண்டவனுடைய சடாமுடியில் இடம்பெற வைத்துள்ளார்கள். இன்னும் பருவ காலங்களின் அருமையைப்பற்றி யாது சொல்வது! லக்ஷியம் எதுவும் இல்லாமல் வெறும் குருட்டாம் போக்கில் தோன்றியது தான் இந்தப் பிரபஞ்சம் என்ருல் அதனை ஏற்றுக் கொள்வது மிகவும் சங்கடமான காரியந்தான்.

மதம் மதம் என்று முழங்கப்படுகிறதே; இந்த மதத்திற்குரிய ஆதா

ரம் என்ன? என்று சிலர் கேட்கலாம். மதத்திற்குரிய ஆதாரம் மெய்ஞ்ஞானிகளின் அனுபவந்தான். விஞ்ஞானிகள் எவ்வாறு ஆராய்ச்சிசாலைகளில் அமர்ந்து, ஊணையும் உறக்கத்தையும் துறந்து, பௌதிக ரஸாயன உண்மைகளைக் கண்டுபிடிக்கிறார்களோ அவ்வாறே மெய்ஞ்ஞானிகளும் ஆன்ம ஆராய்ச்சி சாலைகளில் அமர்ந்து, உற்றாரையும் ஊராரையும், இகத்தையும் சுகத்தையும் துறந்து தெய்விக உண்மைகளைக் கண்டுபிடிக்கிறார்கள். அவர்கள் வெளியிடும் அனைத்தும் அனுபூதிமயம். "மதம் என்பது, கேவலம், குருட்டு நம்பிக்கை இல்லை. மதம் என்பது அனுபூதிமயம்" என்கிறார் ஓர் ஆங்கிலப் பேராசிரியர். (*Religion is not mere superstition, but a glorious record of*

*self-realization.*") ஞானிகளுடைய அனுபவத்தில் நம்பிக்கை அற்றவர்களாக, வெறும் பகுத்தறிவைக் கொண்டு விஞ்ஞானிகள் என்னவெல்லாமோ ஆராய்ச்சிகளைச் செய்துதான் பார்க்கிறார்கள். ஆயினும் ஏன், ஏன் என்றுள்ள புதிர்கள் அவர்களை மயங்க வைக்கின்றன. அவர்களுடைய ஆராய்ச்சியின் பயனாக ஒரு உண்மை நன்றாகப் புலப்பட்டுவிட்டது.

"சாட்டி நிற்கும் அண்டமெலாம்
சாட்டையில்லாப் பம்பரம்போல்
ஆட்டி வைக்கும்" பேருள்ளம்

(*MIND*) ஒன்று இருக்கிறது என்ற உண்மைதான்; வேறொன்றும் இல்லை.

"*The Universe begins to look more like a great thought than like*

*a great Machine. MIND no longer appears as an accidental intruder into the realm of Matter; We are beginning to Suspect that we ought rather to hail it as the Creator and the Governor of the realm of Matter -not of Course our individual mtnds, but the MIND in which the atoms, out of which our individual minds have grown, exist as thoughts.', Sir James Jeans.*

" இந்தப் பிரபஞ்சமானது ஏதோ யந்திரம் போன்ற ஒன்றில்லை, ஆனால் மகத்தான ஒரு பாவனை என்று கொள்ளும்படியாக இருக்கிறது. **பேருள்ளம்** (*MIND*) என்பது இதனுள்ளே குருட்டாம் போக்கில்

நுழைந்த இடைச்செருகல் இல்லை. பதார்த்தங்களைப் படைப்பதும் பராமரிப்பதும் அந்தப் பேருள்ளந்தான் என்று கொள்ள வேண்டியதாகுமோ என்று சந்தேகிக்க முனைகிறோம். பேருள்ளம் என்பது நம்மிடையே தனித்தனியாக இருக்கும் உள்ளத்தைக் குறிக்காது. அந்தப் பேருள்ளமானது நம்முடைய தனித்தனி உள்ளங்கள் தோன்றுவதற்குரிய அடிப்படையாகிய அணுக்களைத் தன்னகத்தே சங்கற்ப ரூபத்தில் கொண்டுள்ளது." இதுவே அறிஞர் ஸர். ஜேம்ஸ் ஜீன்ஸ் என்பவரின் கருத்து.

விஞ்ஞானிகள் கூறும் இந்தப் பேருள்ளத்தையே நாம் ஆண்டவன் என்றும் வாலறிவன் என்றும் அழைக்கிறோம்.

விஞ்ஞானிகள் துணை செய்தது போன்று தத்துவ ஞானிகளும் அவர்களுடைய சாதனமாகிய தர்க்கத்தின் (*Logic*) மூலம் கடவுள் உண்மையை உணர்வதற்குத் துணைசெய்துள்ளார்கள். அவர்களுடைய தர்க்க வாதங்களின் பயனாகப் பல பல உண்மைகளும் ஊகங்களும் கிடைத்துள்ளன. அவ்வாறு கிடைத்தவற்றுள் ஒன்று பின் வருமாறு: "வெறும் அறிவானது தன் நிலையை அளந்தறியத் தன்னுடைய எல்லையைக் கடந்து செல்ல முடியாது" என்பதாகும். "*Pure intellect cannot go beyond itself to measure its own cause.*" வாஸ்தவந்தான். ஆகவே தர்க்கம் ஒரு நிலையில் நின்றே விடுகிறது.

**"அருளால் எதையும் பாரென்றான்—அத்தை**

அறியாது சுட்டியேன்
அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட
தல்லால்—கண்ட
என்னையும் கண்டிலேன்
என்னேடி தோழி''

என்று பாடி இதே கருத்தை மகான் தாயுமானவர் வற்புறுத்துகின்றார். மூல உண்மையைத் தர்க்க வலைக்குள் வீழ்த்திவிட முடியாது. (*Knowledge of the Final Truth cannot be attained by arguments*)

தர்க்கம் புக முடியாத இடத்தில் உள் ஒளி புகமுடியும். இந்த உள் ஒளியை (*INTUITION*) இயற்கை—நுண்ணறிவென்றும் ஒட்பம் என்றும் அழைக்கலாம். பரிசுத்தமான மனத்தினுள் அமர்ந்த உள் ஒளி கொண்டு

தர்க்கத்தால் காணமுடியாத உண்மைகளை எளிதாகக் காணலாம்.

தெரியாதது எதுவோ, தெரியமுடியாதது எதுவோ, அதனை, "தான்" என்ற பாவனையின் மூலம் உணர்ந்துவிடலாம்என்றுவே,தாந்தம் கூறுகின்றது. "தான்" என்னும் பாவனை நிலையானது சிந்தனை முயற்சி எதுவும் இல்லாது மனம் நிம்மதியாக இருக்கும்போது உருவாகும். இதனையே நிர்விகற்ப சமாதி என்று அறிஞர் கூறுவர்.

எல்லா' ஜீவராசிகளிடத்தும் ஆத்மா குடிகொண்டிருக்கிறது. ஒரு ஆத்மாவிற்கும் மற்றொரு ஆத்மாவிற்கும் ஏதேனும் வேறுபாடு உண்டாஎன்றால், வெளித்தோன்றும்

முறையில் உண்டு. அறியாமையா னது திரைபோல் மறைக்கின்றது **புழு நிலையிலிருந்து புத்த நிலைவரை** நாம் படிப்படியாய் வளர்ந்துகொண்டே வருகிறோம். அவ்வாறு வரும்நிலையில் எவ்வளவுக்கெவ்வளவு அறியாமை யாகிற திரையைக் கிழிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நமது ஆத்மா பிரகாசமடைகிறது. படிவளர்ச்சி நிலையின் கீழ்ப்படியில் இருக்கும் போது உடலின் தேவைகளைத் திருப்தி செய்வதற்கே அறிவு திரட் டப்படுகின்றது. ஆனால் மனித நிலையைப் பெறுங்காலத்தில் உடலின் தேவை போக அறிவின் தேவைகளைத் திருப்தி செய்யும் முனைப்பும் எழு கின்றது. இந்த முனைப்பானது மனித நிலையில் மிகவும் கீழ்ப்படியில் இருக்

கும்போது, தளர்ந்திருக்கும்,மேல்-படி யில் இருக்கும்போது தடித்திருக்கும்.

பெரும்பாலும் மக்களிடையே உடலின் தேவைகளைத் திருப்தி செய்யும் முனைப்பே அதிகமாக இருக் கின்றது. அது பாவமான காரிய மில்லை. ஆனாலும் உடலின் தேவை களைத் திருப்தி செய்ய முயலும் முயற்சியைமுன்னிட்டு அறம்பிறழ்ந்த செயல்கள் எத்தனையோ நிகழ்கின் றன. மக்கள் இனத்தை வகுக்க முனைந்த முனிவர் ஒருவர் பின்வரு மாறு கூறுகின்றார்.

“மனிதரிலும் பறவையுண்டு,
விலங்குண்டு, கல்லுண்டு,
மரமும் உண்டு,
மனிதரிலும் நீர்வாழும் ஜாதியுண்டு
அநேக குல மனிதருண்டு,

மனிதரிலும் மனிதருண்டு, வானவரும்
மனிதராய் வருவதுண்டு,
மனிதரிலே பிறப்பறுக்க வந்தவரும்
அருமையென வகுத்துளாரே''

இப்பாடலை அடிப்படையாக வைத்துக்கொண்டு பார்த்தால் மக்களிடையே காணும் அறம்பிறழ்ந்த செயல்களுக்கு ஏதாவது சமாதானம் கூறமுடியும். மனிதன் தன்னுடைய அறிவுகொண்டு எத்தனையோ சாகசங்களையும் அற்புதங்களையும் செய்து வருகின்றானயினும், மன அளவில் திருத்தம் பெறாதிருக்கின்றானே என்றால், எல்லாம் உடம்பின் தேவைகளைப் பெரிதாக மதிக்கும் ஊனமான கோட்பாட்டாலேதான்; வேறு ஒன்றும் இல்லை.

மனிதனைக் கடவுள் என்று சொல்லக்கூடிய அளவில் இன்று

அத்தனை பேராற்றலைப்பெற்று விளங்குகிறான். காலம் ஒரு பொருட்டில்லை. தூரமும் பொருட்டில்லை. வென்று விட்டான் மனிதன். இயந்திரங்களே இன்று அவனுக்குக் கண்கண்ட தெய்வம். இன்னும் இந்தப் பகுதியை விரித்தெழுதவேண்டிய அவசியமே இல்லை. விஞ்ஞானத்தின் விளைவை நாம் நன்றாக அறிவோம். ஆனாலும் ஒன்று நம்முடைய கண்ணை உறுத்திக் கொண்டிருக்கிறது. அதுயாது? இக உணர்வு வீங்குகின்றது. பர உணர்வு மெலிகின்றது. உடல் அளவில் வளம். உள்ளத்தளவில் வறுமை. அறிவு பெருகுகின்றது. அகம் அருகுகின்றது.

இந்த இடத்தில் மகா மேதாவியாகிய பெர்க்ஸன் என்பவர் மதத்தின்

அவசியம் குறித்துச் சொல்வதைச் சிறிது கவனிப்போம்.

மனிதனுடைய அறிவு அவனுக்குத் துணை செய்வதோடு வினையும் செய்கின்றது. மனிதனும் தன்னுடைய இயற்கைக் கேற்றபடி சமுதாயத்தை அமைத்துள்ளான். எறும்புகளும் தங்களுடைய இயற்கைக்கேற்ற படி சமுதாயத்தை அமைத்துள்ளன. அந்த அந்தச் சமுதாயம் நிலைக்க வேண்டுமாயின் சில தனிப்பட்ட வசதிகளைத் தியாகம் செய்தால்தான் முடியும். எறும்புகள் இந்தத் தியாகத்தை நன்றாகச்செய்து நிறைவேற்றுகின்றன. ஏனென்றால் அவைகளிடையே உள்ள இயற்கை - உணர்வு (*Instinct*) அவைகளை அந்தப் பக்கம் இந்தப் பக்கம் திரும்ப விடுவதில்லை; ஆகவே அவைகளிடம் காணப்படும்

இயற்கை-உணர்வை நம்பலாம். அதே அளவில் மனிதனுடைய பகுத்தறிவை நம்புதற்கில்லை. அறிவு எப்பொழுதுமே பயனை நோக்கமாகக் கொண்டது. அவ்வப்போது தனக்கு வேண்டிய தேவைகளைத் திருப்தி செய்யும் கருவியாகவே அது பயன்படுத்தப்படுகிறது. **ஆகையினால் தன்னலத்தைப் பேணுவதோடு பொது நலத்தையும் பேணத் தூண்டுவதான *சாதனம் ஒன்று குறுக்கிட்டுத் தீர வேண்டும்.** அத்தகைய சாதனம் எது என்பதை ஆசிரியர் பேர்க்ஸன் குறிப்பிடுகின்றார். அதனை *Intuition* என்றழைக்கிறார். இந்த இடத்தில் (*intuition*) என்பதற்கு அவர் கற்பிக்கும் விசேஷப் பொருள் 'பாவனை' என்பதாகும். இது குறித்து இன்னும்

* மதம் என்க.

அறிய விரும்புவார் (*Guide to Philosophy by C. E. M. Joad, 15th Edition, Page, 549*) பார்க்க. ஒவ்வொருவருக்கும் ஆன்ம இயல்பினைப் பற்றிய நாட்டம் ஏதாவது ஒரு வடிவத்தில் சிறிதளவாவது இருக்கத் தான் செய்கிறது. மதமானது அதனை விருத்தியடையத் துணைபுரிகிறது.

ஆசிரியர் கென்னத்வாக்கர் என்பவர் (*Kenneth Walker-Meaning and purpose* என்னும் நூலின் ஆசிரியர்)-பேரறிஞர் பெர்க்ஸனுடைய படிவளர்ச்சி விதியைப் பற்றிக் குறிப்பிட்டு அடியில் வருமாறு எழுதுகின்றார். படி வளர்ச்சியின் குறிக்கோளை அறிய வேண்டின் அது தன்னுடைய எல்லைக்கும் மீறிய ஒன்றை அடைவதற்கு, அதாவது,

மெய்ப்பொருள் ஞானி (*Mystic*) எந்த நிலையை அடைகின்றானோ அந்த நிலையை அடைவதற்கு முயலுகிறது என்பதைப் புரிந்துகொண்டால்தான் முடியும். எல்லா மனிதர்களும், அல்லது பெரும்பாலோர் மெய்ப் பொருள் ஞானி அடைந்த நிலையை அடையக் கூடுமாயின், மனித இனத்துடன் இயற்கை நின்றிருக்கும். ஏனென்றால், மெய்ப்பொருள் ஞானி மனித இனத்திலும் மேலான இனத்தைச் சார்ந்தவன்.'' இது பேரறிஞர் பெர்க்ஸனின் கருத்து என்பதாக ஆசிரியர் கென்னத்வாக்கர் கூறுகின்றார்.

*"Bergson is of the opinion that we can only understand the evolution of life if we view it as seeking beyond its reach, something*

*to which the great mystic attains. If all men, if any large number of men Could have soared as high as this privileged man, Nature would have stopped at the human species; for Such a one in fact is more than a man."*

பேரறிஞர் பெர்க்ஸனின் உள்ளக் கிடக்கை என்னவென்றால், மனிதன் இன்னும் பரிபூரணம் அடையாத ஜந்து, ஆகவேதான் இயற்கையானது **அதிமனித** இனத்தைத்தோற்றுவிப்பதற்கு இன்னமும் நில்லாமல் நிலையாமல் இயங்கிக்கொண்டிருக்கிறது என்பதாம்.

உண்மை மதம் எதை உணர்த்துகிறது? உள்ளத்தைத் தெளிவு செய்

யும் மார்க்கத்தைத்தான் உணர்த்து கிறது. நம்மகத்தே அடங்கியுள்ள கடவுள் அம்சத்தை வெளிக்காட்டும் வழி வகைகளை உணர்த்துகிறது. மனிதன் பூரண நிலைமை அடைய வேண்டும். அது அவனுல் சாதிக்கக்கூடிய காரியந்தானு என்ருல், ஆம், என்பது தான் பதில். நம் நாட்டிலும் பிறநாட்டிலும் அவ்வாறு சாதித்துக் காட்டிய ஞானியர் பலரும் உண்டு. அவர்கள் சாதித்துக் காட்டியதன் மூலம் படிவளர்ச்சி விதியின் தத்துவமே இனிது விளங்குகின்றது. மனித நிலையுடன் படிவளர்ச்சியானது நின்றுவிட வில்லை. மனித நிலைக்கு அப்பால் **அதிமனித நிலை** ஒன்றிருக்கிறது. அதனை நாம் அடையவேண்டும். வெறும் மனிதநிலையை அடைந்ததும் படிவளர்ச்சியின் வரம்பைத் தொட்டு

விட்டதாக மனப்பால் குடிப்பது பேதமையாகும். இதுபற்றி பேராசிரியர் ஜேம்ஸ் (*James*) கூறுவதைக் கவனிக்க வேண்டும்.

"மனித அனுபவம் ஒன்றே இப்பிரபஞ்சத்துள் மேலான அனுபவம் என்பதை என்னால் நம்பவேமுடியாது. நமக்கும் பிரபஞ்சத்திற்கும் உரிய உறவு எத்தகையதென்றால், நமக்கும் நாம் வளர்க்கின்ற நாய் பூனைகளுக்கும் உரிய உறவு எப்படியோ அப்படித்தான். அவை நம்முடைய வீட்டிலுள்ள அறைகளிலும் நூல் நிலையங்களிலும் சுற்றித்திரிகின்றன. நம் வீட்டில் நடைபெறும் நிகழ்ச்சிகளிலும் அவை கலந்துகொள்கின்றன. ஆனால் அவைகளால் எதையேனும் புரிந்துகொள்ளமுடிகிறதா என்றால், இல்லை.

வட்டத்தை அண்டிக்கிடக்கும் ஒட்டுக்கோடு போன்று அவை நம்மை அண்டி நிற்கின்றன. விஷயங்களின் தோற்றங்கள், முடிவுகள், அமைப்பு முறைகள் ஆகிய இவை பற்றிய மர்மம் எதுவும் அந்த ஜந்துக்களுக்கு விளங்குவதில்லை. நம்முடைய நிலையும் அப்படித்தான். நாமும் ஒட்டுக் கோடுகளே."

*"I firmly disbelieve myself that our human experience is the highest form of experience extant in the Universe. I believe rather that we stand in much the same relation to the whole of the Universe as our canine and feline pets do to the whole of Human Life. They inhabit our drawing-rooms and libraries. They take part in scenes of*

*whose significance they have no inkling. They are merely tangent to curves of history, the beginnings and ends and forms of which pass wholly beyond their ken. So we are tangent to the wider life of things."*

*(Prof. James of the Harward University)*

ஆகவே இப்பொழுது நமக்கு மனித நிலையின் ஏழ்மையானது தெளிவாகப் புலப்படுகின்றது. இந்த நிலையை விடுத்து நாம் அதிமனித நிலையை அடைய வேண்டும். மதம் அதற்குப்பெருந்துணை செய்கின்றது.

“மதம் தர்க்கத்திற்கு ஒவ்வாது. விஞ்ஞான ஆராய்ச்சிக்குள் அடங்

காது. அதன் பெயரால் எத்தனையோ பூசல்கள் எழுகின்றன. சகோதரர்களே சகோதரர்களை வஞ்சிக்கின்றார்கள், ஏமாற்றுகின்றார்கள். மேலும் மதமானது இருக்கின்ற உலகை விடுத்து இல்லாத உலகை எண்ணி ஏங்கவைக்கிறது. நம்மிடையே சங்கற்பம் (free-will) இருந்தும் அதனைப் புறக்கணித்து விட்டு விதி, விதி என்பதாக அதனையே நம்பி அதற்கே அடிமையாகும் மனநிலையை உருவாக்குகின்றது. இதனால் உலகில் வாழ்வதற்குரிய உள்ள எழுச்சியே தளர்ந்துவிடுகிறது" என்று இவ்வாறாக மதத்தை எதிர்க்கின்றவர்கள் கூக்குரலிடுகின்றார்கள்.

மதத்தை இழித்துக்கூறும் மரபானது இன்று நேற்று எழுந்ததில்லை. பன்னெடுங் காலமாகவே

இருந்து வருகிறது. மற்றும் இந்த நாட்டில் மட்டிலுந்தான் என்பதில்லை. ஐரோப்பிய நாடுகளிலும் உண்டு. அதிசயம் ஒன்றுமில்லை. நம்பிக்கைக்கும் தர்க்கத்திற்கும் போர் இருந்தே தீரும்.

படி வளர்ச்சி நியதியில் ஓர் விதி உண்டு. தக்கது நிலைத்தல் என்பதே அந்த விதி. (*Survival of the fittest*) எது ஒன்று நிலைக்கும் தகுதியைப் பெற்றிருக்கிறதோ அதுதான் நிலை பெறும். ஏனையவை அழிந்துவிடும். மதமானது எத்தனையோ போராட்டங்கள் வந்தும் அழிந்துவிடவில்லை. இன்னும் சொல்லப்போனால் ஒவ்வொரு படையெடுப்புக்குப் பின்னும் உரம் பெருகிறதே தவிர ஒன்றுமில்லாது மறைந்துவிடவில்லை. சந்தேகங்களை எழுப்ப எழுப்ப மதத்தின்

சிக்கல்கள் தெளிவுபடுகின்றனவே அல்லாது சிக்கல்களுக்குள் மதமானது புதையுண்டு போய்விடவில்லை. நமது நாட்டிலும் மேலைநாட்டிலும் எத்தனையோ ஞானியர் தோன்றி மதத்தின் பெருமையை நிலைநாட்டியுள்ளார்கள். பன்னெடுங்காலமாக மக்களுடைய உள்ளமும் உணர்வும் ஆர்வத்துடன் பற்றி கிடக்கும் கொழு கொம்பை அசைத்துப் பிடுங்குவதென்றால், அறிவை ஆழச் செலுத்தி ஆலோசனை செய்யவேண்டும்.

சமுதாயம் என்பது மழை பெய்ய முளைக்கும் காளானில்லை. எத்தனையோ விதமான பிரச்னைகளுடன் முட்டி மோதிப்பெற்ற அனுபவ பலத்தினால், மதம் என்பது மக்கள் சமுதாயத்திடையே பல நூற்றாண்டுகளாக நிலவி வருகின்றது. நிலவக்கூடிய

தகுதி வாய்ந்துள்ள காரணத்தால் நிலவி வருகின்றது என்பதை மறந்து விடக்கூடாது. அவ்வாறு நிலவு வதற்குரிய அடிப்படை யாது என் பதை ஆராயவேண்டுமே தவிர மேற் பரப்பில் தோன்றும் ஒருசில குறை பாடுகளை வைத்துக்கொண்டு அறவே தாக்கிவிடக்கூடாது. "விஞ்ஞான மானது காரண காரிய நியதி வழு வாது எதையும் விளக்கிக் காட்டு கிறது. மதத்தால் அப்படி முடிய வில்லை. ஆகையினால்தான் மதத்தை இழித்துக்கூற வேண்டியதாகிறது" என்று சிலர் சொல்லலாம். ஆம் உண்மைதான். ஆனாலும் விஞ்ஞா னத்தின் ஆற்றலையும் சிறிதளவு ஆராய்ந்து பார்க்கவேண்டும். இன் றுள்ள விஞ்ஞானமானது இயற்கை யினுடைய முழு மர்மத்தையும்

விளக்கிவிட்டதா? இல்லை, ஏனென்றால், அதனால் முடியவில்லை. ஏதனால் முடியவில்லையென்றால், அதன் ஆராய்ச்சிக்குரிய உண்மையானது அதனுடைய வரம்பையும் மீறியதாக இருக்கிறது. இந்த இடத்தில் அறிஞர் ஹெர்பட் ஸ்பென்சருடைய பொன்மொழிகளை நாம் உற்று நோக்க வேண்டும்.

“விஞ்ஞானமானது கடவுளில்லையென மறுப்பதை நிறுத்தட்டும் அல்லது லோகாயதத்தை ஏற்றுக்கொள்வதை நிறுத்தட்டும். மனமும் பதார்த்தமும் ஒன்றுக்கொன்று தொடர்புடைய நியதிகள்; இரண்டும் இன்னதென விளக்க முடியாத ஒரு மூலத்தின் விளைவுகள். அறிய இயலாத அந்த மூலத்தை ஒப்புக்கொள்வதே ஒவ்வொரு மதத்தின் அடிப்படை

யாகும். தத்துவ விசாரணைக்கும் அந்த மூலமே அடிப்படை."

*"Let Science cease to deny Deity or to take materialism for granted. Mind and Matter are equally relative phenomena, the double effect of an ultimate cause whose nature must remain unknown. The recognition of this inscrutable power is the core of truth in every religion and the beginning of all philosophy."*

அறிவானது தன்னுடைய எல்லையைத்தாண்டி தனது மூலத்தை உணரமுடியாது. அறிவால் அறியமுடியாததற்கு மதம் எவ்விதம் துணைசெய்யமுடியும் என்று சந்தேகிக்கலாம். பகுத்தறிவுகொண்டு அறிய

முடியாததை எம்முறைகொண்டு அறியலாம் என்பதை மேதாவிகள் விளக்கிக் காட்டுகின்றனர்கள். இதோ பார்ப்போம்.

ஒழுக்கம், கருணை, நெக்குருகும் இதயம், உள் ஒளி ஆகிய இந்நான்கின் துணைகொண்டு அறிவரிய மூலத்தை ஓரளவு அறியக்கூடும்.

இக்கருத்தை உட்கொண்டே பாரதியார் கதறுகிறார்.

"உள்ளம் குளிராதோ—பொய் ஆணவ
ஊனம் ஒழியாதோ!
கள்ளம் உருகாதோ-அம்மா பக்திக்
கண்ணீர் பெருகாதோ" -

மேலே கூறியது சம்பந்தமாக சுவாமி விவேகானந்தர் தமது கோட்பாட்டை வெளியிடுகின்றார். அது

மிகுந்த திருப்தியை அளிக்கின்றது. இராமகிருஷ்ண பரம ஹம்சருடைய ஆத்ம அனுபவங்களை அடிப்படையாக வைத்துக்கொண்டு ஆராய்ந்த தன் மூலம் விவேகானந்தருக்கு ஓர் உண்மை புலப்பட்டுவிட்டது. அது பின் வருமாறு: அறிவால் காணமுடியாததை அகத்தால் காணமுடியும் என்பதே அவர் கண்ட உண்மை. இதயமானது பரிசுத்த நிலையை எய்துமானல் ஆருவது புலன்ஒன்று (*Sixth Sense*) உற்பத்தியாகிறது. அத தான் உள்ஒளி என்பது. அது தான் பேரறிஞர் பெர்க்ஸன் என்பவர் விசேஷப் பொருளில் உபயோகித்த பாவனை என்பது. அந்த உள்ஒளி அல்லது பாவனை சித்தியாகிவிட்டால் ஐம்புல வரம்புகளுக்கு அப்பாற்பட்ட உண்மைகளை எளிதாக உணரலாம்.

அந்த உள் ஒளிதான் ஞானியின் கண். இதுவே விவேகானந்தருக்குப் புலப்பட்ட உண்மை. மிகவும் சிறந்த ஒன்று. பூட்டிக் கிடக்கின்ற கபாடங்களைத் திறப்பதற்கு உள்ஒளியைக் காட்டிலும் சிறந்த சாவி கிடையாது. இது ஏதோ இந்து மதத்திற்கே உரிய தனி உடைமை என்று கொண்டுவிட வேண்டாம்.

கள்ளம் தவிர்ந்ததாய், கருணை நிறைந்ததாய், பாவனை படிந்ததாய் விளங்குகின்ற உள்ளத்தினுள்ளே உள்ளொளி எளிதாகப் படரும். கடவுள் உண்மையானது என்றும் உணரப்பட்டே உணர்த்தப்படுகிறது. எந்த நாட்டு ஞானியரின் வாழ்க்கையை ஞாபகத்தில் கொண்டாலும் இந்த உண்மை நன்கு புலப்படும்.

உள்ளொளி பற்றி இவ்வளவு தூரம் உயர்த்திக் கூறுவதைத் தத்துவ ஆராய்ச்சியாளர் சிலர் பரிகசிக்கலாம். அறிவைப் போன்றே உள்ளொளியும் கருவி, கர்த்தா, காலம், இடம், விதி ஆகிய நியதிகளின் எல்லைக்குள் நின்றுதான் இயங்கவேண்டியதிருக்கிறது. பதார்த்தத்தின் எல்லை, மனத்தின் எல்லை ஆகிய இரு எல்லைகளையும் கடந்து நிற்கும் பேருண்மையானது உள்ளொளியின் எல்லையையும் தாண்டித்தான் நிற்கிறது. ஆயினும் பரந்த இயற்கையின் மாட்சியுள் ஆழ்ந்து டம்பொருளின்பெருமையை எவ்வாறு ஐம்புலவாயிலாக அறிந்து நுகர்கின்றோமோ அவ்வாறு உள்ளொளியின் வாயிலாகவும் எத்தனையோ மேலான அனுபவங்களைப் பெறக்கூடும். கடவுளுக்குவடிவமில்லை.

ஆயினும் உள் ஒளியின் பயனுக அவனை எத்துணையோ வடிவங்களு டன் விளங்குபவனுக அனுபவிக்க லாம். உள் ஒளியின் பயனுக இன்னும் கடவுள் ஒளிபடர்ந்த தூயமனத்தை யும் சாந்தியையும் பெற்றுவிடலாம். உள்ளொளி பெருகப்பெருக இறுதி யில் மௌனநிலை சித்திக்கும். அந்த நிலையை எவன் எய்துகின்ருனே அவன் எங்கும் தன்னையே காண்கின் ருன் என்று சாஸ்திரங்கள் உறுதி கூறுகின்றன.

சிலர் பின்வருமாறு கூறுகின்ற னர். தெய்வத்தை நம்பவும் வேண் டாம், உள்ளொளியைப் பெருக்கித் தன்னையே தான் ஏமாற்றிக்கொள்வ தான பாவனை வெள்ளத்தில் அழுந்த வும் வேண்டாம், மனித வர்க்கத்தின் நலனுக்கேற்ற ஆசாரத்தை மட்டிலும்

தழுவினால் போதும் என்கின்றனர். இன்னும் சிலர் இதே கருத்தை இன்னொருவிதமாகவும் கூறுகின்றனர். தெய்வம் என்று எண்ணும் போது ஏதாவது உருவம் உருவாகத் தான் செய்கின்றது. நாளாவட்டத்தில் அந்த உருவத்தை முன்னிட்டு விருப்பு வெறுப்புக்கள் முளைக்கின்றன. அவை காரணமாக வேண்டாத விபரீதங்களெல்லாம் தோன்றுகின்றன. ஆகவே தெய்வ சிந்தனையை அறவே துறந்துவிட்டு ஒழுக்கத்திலேயே கண்ணும்கருத்துமாக இருந்துவிட்டால் போதுமானது என்பதாகவும் கூறுகின்றனர்.

கருத்தளவில் நன்ருகவேகாணப்படுகிறது. ஆசாரங்களைத் தழுவ வேண்டும் என்று சொல்வதெல்லாம் சிறந்த கோட்பாடுதான். புத்த பக

வான் பிரம்ம விகாரம் என்று குறிப்பிடுவதும் கிட்டத்தட்ட இதைத் தழுவியதுதான். இதனை ஆட்சேபிக்க வேண்டாமென்றாலும் இது குறித்து இரண்டொரு வார்த்தை சொல்லத்தான் வேண்டும்.

சில கொள்கைகள் கொள்கை அளவில் நன்றாக இருக்கின்றன. ஆனால் நடைமுறையில் வலிதளர்ந்து காணப்படுகின்றன. உதாரணமாக ஜனநாயகத்தை எடுத்துக்கொள்ளுவோம். வாக்குரிமை என்பது மிகப் புனிதமானது. மனிதனுடைய சீலத்தின் தரத்தைக் காட்டும் உரைகல். எத்தனை பேர் அதனைத் தக்க முறையில் கையாளுகின்றார்கள் என்பது நமக்குத் தெரியும். பணத்திற்காக வேண்டி விற்கின்றார்கள். பகைமையை முன்னிட்டு துர்விநியோகம்

செய்கின்றார்கள். இன்னும் வேடிக்கைக் கருவியாகக் கொண்டு விளையாடுகின்றார்கள். மனிதர்களின் போக்கானது முறை பிறழ்ந்து செல்வதனாலே சட்ட திட்டங்களையெல்லாம் புகுத்தி, மனிதனுடைய சுயமரியாதைக்கு அவமானம் விளைக்கும் ரீதியில் கட்டுப்பாட்டை வற்புறுத்த வேண்டியதாகிறது. தாமஸ் பெய்ன் (*Thomes Paine*) என்னும் பேரறிஞர். தனி மனிதனுடைய நலனை வளர்க்க சமுதாயம் வேண்டுமென்றும் தனி மனிதனுடைய குறும்பை ஒடுக்க அரசாங்கம் வேண்டுமென்றும் சொல்லியிருக்கிறார். கேவலம்; குறும்பை ஒடுக்கத்தானா அரசாங்கம் வேண்டும்! அவருடைய கூற்றில் நியாயம் இருப்பதாகவே தோன்றுகிறது. அண்மை

யில் மிக வருந்தக்கூடிய செய்தி ஒன்று பத்திரிகையில் வெளிவந்தது. சென்னை ராஜ்யத்திலுள்ள கைதிகளின் எண்ணிக்கை 19832 என்றும், சிறைச்சாலைகளில் போதிய இடமில்லாததால், தண்டனை முடிவதற்கு முன்னதாகவே அநேக கைதிகள் விடுதலை செய்யப்படுவர் என்றும் அச்செய்தி குறிப்பிட்டது. ஆயிரம் ஆயிரமான பள்ளிக்கூடங்களும் வாசகசாலைகளும், பிரசார ஸ்தாபனங்களும், புஸ்தகங்களும் பத்திரிகைகளும் வாய்த்திருந்தும் குற்றம் செய்வாரின் எண்ணிக்கையும் அவர்களை விசாரணை செய்து தண்டனை வழங்கும் நீதி மன்றங்களும் பெருகிக்கொண்டு செல்கின்றனவேயன்றி அருகுவதாக இல்லை.

வட துருவம் தென் துருவம் ஆகிய இரு முனைகளையும் தொட்டு உலகம் உருளுவது போன்று மனிதனுடைய வாழ்க்கையும் இகம், பரம், ஆகிய இரு முனைகளையும் தொட்டு இயங்கி வருகின்றது. பெரும்பாலும் மனிதனுடைய வாழ்க்கையின் பெரும் பகுதி இகம் என்னும் முனையின் பக்கமே சாய்ந்திருக்கிறது. அவ்வாறு சாய்வது இயற்கைதான். ஆனாலும் ஒன்றை மறந்துவிடக் கூடாது. அகங்காரம், அசூயை பழிக்குப்பழி வாங்கல் போன்ற தீய பண்புகளை வளர்த்து வாழ்க்கைக்கு இன்றியமையாததான உடலின் தேவைகளை நிறைவேற்ற முற்படுதல் பொருந்தாத காரியமாகும்.

மனிதனுடைய ஒழுக்கம் இரு வகைப்படும். ஒன்று புற ஒழுக்கம்.

மற்றொன்று அக ஒழுக்கம். புற ஒழுக்கத்தைத் திருத்துவதற்குச் சட்டங்கள் தேவை. அக ஒழுக்கத்தைத் திருத்த வேண்டுமே, அதற்கு யாது செய்வது? ஒருவனைக்கொன்றாலும், அல்லது கொலை செய்வதாக அச்சுறுத்தினாலும் குற்றம். அக்குற்றத்திற்குரிய தண்டனையை வழங்குவதற்குச் சட்டம் இருக்கின்றது. ஆனால் ஒருவனைக் கொலை செய்ய வேண்டுமென்று எண்ணங்கொண்டால் அதனை எவ்வாறு தண்டிக்க முடியும்?

இந்த இடத்தில்தான் மதத்தின் அவசியம் உணரப்படுகிறது. மதம் அகத்தைத் திருத்துவதையே தனது முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ளது. மனிதனுடைய அகம் திருந்தி

விட்டால் பூவுலகம் பொன்னுலக மாகிவிடும். பூவுலகைப் பொன்னுல காக்கவே மதம் பாடுபடுகின்றது. மதம் எதற்கு, நல்லொழுக்கத்தைப் பேணினல் போதாதோ என்று வாதாடுகிற "அறிஞர்கள்" சிறிது கவனிக்கவேண்டும். அக ஒழுக்கத் தைத் திருத்தும் குறிக்கோளைக் கைவிட்ட மதம் ஏதேனும் உண்டா என்பதை ஆராய வேண்டும். அல்லா மலும் மகா ஞானிகள் என்றெல்லாம் போற்றப்பட்டு வரும் பெரியார்கள் ஒழுக்கத்தை உதாசீனம் செய்த நிலையிலே ஞானத்தைப் பெற்ருர் களா அல்லது ஒழுக்கத்தின் வாயிலா கவே ஞானத்தைப் பெற்ருர்களா என்பதையும் ஆராய வேண்டும். மதத்தைக்காட்டிலும் ஒழுக்கத்தை வற்புறுத்துகின்ற சாதனம் வேறெது

வும் இல்லை. உண்மையான பரஞானி யைக் காட்டிலும் ஒழுக்கத்தில் சிறந்தவன் வேறு எவனும் இல்லை. அவனைப்போன்று, அன்பு, வாய்மை, தியாகம், வைராக்கியம், பொறுமை ஆகிய பண்புகளை வேறுஎவன்வளர்க் கிறுன்? உலகத்திற்கு நன்னெறி காட்டுபவன் அவன். உலகத்திற்கு நன்னெறி காட்டுவது அவனுல் உரு வாக்கப்பெற்ற மதம். சந்தேகம் எது வும் வேண்டாம். அவன் விண்டுரைத் தது அத்தனையும் அனுபவம். ஆம், பழுத்த அனுபவம். அந்த அனுபவக் கனிகளை நுகர்ந்து மேன்மை அடை வது நம்முடைய தலையாய கடன்.

மனிதன் எப்பொழுதும் தன்னி னும் மிஞ்சிய ஒன்றைக் காணும் போதுதான் அடக்கத்தைக் கைக்

கொள்ளுகிறான். ஆகவே தன்னி னும் மிஞ்சியது தெய்வம், அது அகத்தும் புறத்தும் விளங்கி அருள் புரிகிறது, அதை உணர்ந்து அதன் அருளுக்குப் பாத்திரனவதே பிறவிப் பயன் என்பதை அறிந்து நடப்பது தான் உண்மையான அறிவின் லட்சணம்.

'உள்ளொளியைப் பெருக்கிக்கொள்ளுதற்கும்,
நம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுதற்கும்,
நம்மை இன்னும் நல்லவர்களாக
ஆக்கிக் கொள்ளுதற்கும்,
குறைவிலா நிறைவான அந்த லட்சியப்பொருளை
நெருங்கிச் செல்லுதற்கும்
முயலவேண்டியது முக்கியம் என்பதை
மக்களுக்கு உணர்த்திவிட வேண்டும்.
மற்றய எல்லாம் அடுத்தபடிதான்."

- டாக்டர். லெகாம்தே டு நுவாய்.
(ஹியூமன் டெஸ்டினி பக்கம் : 128)

பெரியார் அவர்களுக்கு

நமது

# விடைகளும் -

# - வினுக்களும்

விடுதலையில் பெரியார் வெளி யிட்ட 30 வினுக்கள், நாம் அனுப்பிய விடைகளுடனும், பெரியாரவர்களை நாம் வினவிய (ஆனல் பதில் கிடைக்காத) 20 வினுக்களும் அடங்கியது.

விலை அணு 2.

ARULNERI THIRUKKOOTTAM
KOONNAKUDI. RAMNAD DT.